11 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

බුද්ධ ධර්මය I, II
**பௌத்தம் I, II**
Buddhism I, II

පැය තුනයි
**மூன்று மணித்தியாலம்**
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
**மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்**
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

## பௌத்தம் I

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள ஏனைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** சித்தார்த்தரான போதிசத்துவர் கடவுளின் அழைப்பைப் பெற்ற பின்னர் தனது கடைசிப் பிறப்புக்கான பொருத்தமான பின்னணியை புத்தியால் ஆராய்ந்து பார்த்தமையைக் குறிப்பது
(1) சமதிஸ் பெரும் பிரீம் (2) பஞ்ச மஹா விலோகன
(3) பஞ்ச மஹா சுவப்ன (கனவு) (4) சதுரங்க சமன்னாகத வீர்யவடீம

**2.** இளமையான சித்தார்த்த இளவரசர் வாழ்க்கையின் யதார்த்தத்தை விளங்கிக் கொண்டது
(1) நிப்புதபதவைக் கேட்டதன் மூலமாகும்.
(2) யமனின் புத்திரிகளின் நடனத்தைப் பார்த்ததன் மூலமாகும்.
(3) நான்கு சகுனங்களைக் கண்டதன் மூலமாகும்.
(4) நடனமாந்தர்களின் அநாகரிகமான கொண்ணிலைகளைக் கண்டதன் மூலமாகும்.

**3.** யசோதரா தேவிக்கு மகன் பிறந்துள்ளார் என்ற செய்தியை சேவகர் மூலம் சித்தார்த்தரான போதிசத்துவர் கேட்டபோது "ராகுலோ ஜாதோ பந்தனம் ஜாதங்" என்று அவரால் கூறப்பட்டமைக்குக் காரணம்
(1) தனது மனைவிக்கு மகன் பிறந்துள்ளான் என்று கேட்டது சந்தோசத்தைக் கொடுத்தமையாகும்.
(2) இராகுல இளவரசனுக்கு எதிர்காலத்தில் பற்றுக்கள் ஏற்படுவதனாலாகும்.
(3) பிறந்த குழந்தைக்கு இராகுலன் என்ற பெயரை வைத்தல் வேண்டுமென்பதனாலாகும்.
(4) உலக வாழ்க்கையிலிருந்து விலகி துறவியாவதற்கு இது தடையாகும் என்பதனாலாகும்.

**4.** புத்த பெருமான் "பிறர் என்னைப் பற்றியோ தர்மம் அல்லது பிக்குகளின் நல்லதையோ கெட்டதையோ பேசினாலும் அதனால் மகிழ்ச்சியோ துக்கமோ அடையக்கூடாது" என, குறிப்பிட்டவொரு பரிபிராஜகவுக்கும் அவரது மாணவனுக்கும் இடையிலான உரையாடல் காரணமாக உபதேசம் செய்தார். இந்த இருவரினதும் பெயர்கள் அடங்கியுள்ள விடை
(1) சுப்பிய, சோணதண்ட (2) பிரம்மதத்த, சுப்பிரபுத்த
(3) சுப்பிய, பிரஹ்மதத்த (4) சுப்பிய, தோதெய்ய

**5.** புத்த பெருமான் அமைதிக்கு மதிப்பளிப்பவர் என்றும் தனது ஆச்சிரமத்துக்கு அவர் வருவதால் அமைதியைப் பேண வேண்டும் என்றும் தனது சீடர்களுக்குக் கூறியவர்
(1) உபக ஆஜீவக (2) சஞ்ஞய பிரிவஜியா (3) சங்கீ பிராமணர் (4) பொத்தபாத பிரிவஜியா

**6.** சித்தார்த்த இளவரசனின் பிறப்பும் புத்த பெருமானின் பரிநிர்வாணமும் நிகழ்ந்த இடத்தைக் குறிப்பிடும் விடை
(1) நிக்ரோத பூங்கா, கலந்தக நிவாப (2) லும்பினி சல் பூங்கா, உபவத்தன சல் பூங்கா
(3) ஜீவக மாமரப் பூங்கா, சப்தபர்ணீ குகை (4) லும்பினி சல் பூங்கா, இஸிபத்தன மிகதாய

**7.** புத்த பெருமான் பாரிலெய்ய வனத்தில் வசிக்கும்போது ஒரு குரங்கினதும் யானையினதும் உபசரிப்பை எந்த மழைக்காலத்தில் பெற்றுக்கொண்டார்?
(1) ஐந்தாவது மழைக்காலத் துறவு வாழ்க்கை (2) ஆறாவது மழைக்காலத் துறவு வாழ்க்கை
(3) எட்டாவது மழைக்காலத் துறவு வாழ்க்கை (4) பத்தாவது மழைக்காலத் துறவு வாழ்க்கை

பக். 2 ஐப் பார்க்க

20. புத்த பெருமான் தோதெய்ய புத்தர சுப மானவகயாவுக்கு உபதேசம் செய்தபடி ஒருவர் துர்வர்ணத்துடன் பிறப்பதற்குக் காரணமாக அமைந்த செயல்
(1) உயிர்க்கொலையில் ஈடுபடுதல்
(2) கெட்ட எண்ணத்துடன் செயற்படுதல்
(3) தனக்குரிய எதனையும் பிறருக்குக் கொடுக்காமை
(4) மற்றவர்களின் சிறப்பைக் கண்டு பொறாமை அடைதல்

21. மனத்தால் தீவிரமாகப் பற்றிக் கொள்வதன் காரணமாக மீண்டும் மீண்டும் பிறவியை தொடர்சியாகப்பெறுவர் எனக் கூறும் அனுலோக பட்டிச்ச சமுப்பாதவின் கூற்று எது?
(1) “சங்கார பச்சய விஞ்ஞாணங்” (2) “பஸ்ஸ பச்சயா வேதனா”
(3) “உபாதான பச்சயா பவோ” (4) “பவ பச்சயா ஜாதி”

22. பஞ்சநீவரண தர்மங்களுக்குரிய மனதில் அமைதியின்மை மற்றும் செய்தவை, செய்யாதவை பற்றி மனதில் ஏற்படும் பச்சாத்தாபம் என்பனவற்றைக் குறிப்பிடுவது
(1) வியாபாத (2) தீனமித்த (3) உத்தச்ச குக்குச்ச (4) விசிகிச்சா

23. நன்மையின்போது, தாய் தந்தையர் செய்யும் நன்மையைவிடவும் கூடிய நன்மையைத் தரக் கூடியதும் தீமையின்போது பகைவன் செய்யும் தீமையைவிடக் கூடிய தீமையை விளைவிக்கக் கூடியதுமான ஒரே விடயமாக பௌத்த சமயத்தில் எடுத்துக்காட்டப்படுவது
(1) மனம் (2) சரீரம் (3) வார்த்தை (4) கவலை

24. பௌத்த சமயத்தில் விவரிக்கப்படும் 'பஞ்ச பலி' எண்ணக்கருவில் வரும் 'புப்பபேத்த பலி' என்பதன் கருத்து
(1) உறவினர்களை உபசரித்தல்
(2) விருந்தினர்களை உபசரித்தல்
(3) இறந்த உறவினர்களுக்காக புண்ணியம் செய்தல்
(4) தெய்வங்களுக்காக புண்ணியம் செய்தல்

25. எதுவித விடயங்களையும் அறியாது எந்தவொரு அடிப்படையும் இன்றி ஏற்படுத்திக்கொண்ட சிரத்தா தர்மத்தில்
(1) அமுலிக்கா சிரத்தா (2) ஆகாரவதி சிரத்தா (3) அசல சிரத்தா (4) அவெச்சப்பசாத சிரத்தா

26. நபர் ஒருவரின் பிறப்புக்குக் காரணமான கர்மா
(1) ஜனக கர்மம் எனப்படும். (2) உபத்தம்பக்க கர்மம் எனப்படும்.
(3) உபபீடக கர்மம் எனப்படும். (4) உபகாதக கர்மம் எனப்படும்.

27. புத்த பெருமான் ஞானம் பெற்ற பின்னர் கூறிய முதல் உதான வாக்கியத்தில் துக்கத்துடனான பஞ்சஸ்கந்த என்ற பெயருடைய வீட்டை உருவாக்கிய, கண்ணுக்குப் புலப்படாத சக்தி என்பதால் குறிப்பிடப்படுவது
(1) அவித்யா (2) வேதனா (3) திருஷ்ணா (4) விக்ஞாண

28. மேலான எண்வகை மார்க்கங்கள் மூன்றுவகை பயிற்சியாகப் (திரிசிக்ஷா) பிரிக்கப்படும்போது சீலத்திற்கு உரிய வழிப்பிரிவுகள் உள்ளடங்கிய விடையைத் தெரிவுசெய்க.
(1) சம்மா தித்த, சம்மா சங்கப்ப, சம்மா வாசா
(2) சம்மா கம்மந்த, சம்மா ஆஜீவ, சம்மா வாயாம
(3) சம்மா வாயாம, சம்மா சதி, சம்மா சமாதி
(4) சம்மா வாசா, சம்மா கம்மந்த, சம்மா ஆஜீவ

29. புத்த பெருமான் அனேக பிண்டிக பிரபுவுக்கு உபதேசம் செய்த 'பத்தகம்ம சூத்திரத்தில்' செல்வம் அல்லது வளங்களை சிறப்பாகக் கையாளுவதற்கான அறிவுரை வழங்கப்பட்டுள்ளது. அங்கு கூறப்பட்டுள்ளவற்றுள் **உள்ளடங்காத** விடயம் எது?
(1) சுயநலத்துக்காக மட்டும் செல்வத்தைச் சம்பாதிக்க வேண்டும்.
(2) தரும வழியில் சம்பாதித்த செல்வத்தை நன்கு பாதுகாத்தல் வேண்டும்.
(3) பஞ்சபலி என்ற கடமைகள் ஐந்தினை நிறைவேற்றுதல் வேண்டும்.
(4) துறவிகளான பிராமணர்களை உபசரிப்பதற்குச் செல்வத்தை ஒதுக்கி வைத்தல் வேண்டும்.

30. “அந்த நபர் என்னை ஏசினார். என்னை அடித்தார். நான் தோற்கடிக்கப்பட்டேன்.” இவ்வாறு பகைமை கொண்டவரின் பகைமையை சாந்தப்படுத்துவதில் கவனம் செலுத்தி உபதேசம் செய்யப்பட்ட தம்மபத காதாவின் முதல் இரண்டு அடிகளும்
(1) “தஞ்ச கம்மங் கதங்சாது - யங்கத்வா நானுதப்பதி”
(2) “அத்தனாவ கதங் பாபங் - அத்தனா சங்கிலிஸ்ஸதி”
(3) “அக்கொச்சி மங் அவதிமங் - அஜினி மங் அஹாசி மே”
(4) “சுகராணி அசாதூனீ - அத்தனோ அஹிதானிச”

பக். 4 ஐப் பார்க்க

11 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021 (2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021 (2022)

බුද්ධ ධර්මය I, II
**பௌத்தம் I, II**
Buddhism I, II

## பௌத்தம் II

* **முதலாம்** வினாவும் வேறு **நான்கு** வினாக்களும் உட்பட **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** (i) இளவரசர் சித்தார்த்தருக்கு சிறு வயதில் கல்வி மற்றும் கலைகளைக் கற்பித்த பிராமணப் பண்டிதரின் பெயர் என்ன?
(ii) தர்ம ரத்னயவின் பண்புகளைக் குறிப்பிடும் அடியில் வரும் 'சந்திட்டுகோ' என்பதன் கருத்தை எழுதுக.
(iii) "யாதிசங் வபதே பீஜங் நாதிசங் ஹரதே பலங்" என்ற வரிகளின் கருத்தை எழுதுக.
(iv) உம்மக்க ஜாதகக்கதையில், போதிசத்துவர் எந்த பூரணத்துவத்தை (பாரம்மிதாவ) நிறைவேற்றிய விதம் வெளிப்படுத்தப்படுகிறது?
(v) திரிபிடகத்தின் பெயர்களைத் தருக.
(vi) சிங்காலோவாத சூத்திரத்தில் குறிப்பிட்டுள்ளவாறு பெற்றோர் தமது பிள்ளைகளுக்கு நிறைவேற்ற வேண்டிய **இரண்டு** கடமைகளை எழுதுக.
(vii) சதர அகதியவின் பெயர்களைத் தருக.
(viii) "சலாயதன பச்சயா பஸ்ஸோ" என்பதன் கருத்தை எழுதுக.
(ix) 'பூஜாவலிய' இனை எழுதிய ஆசிரியரையும் அதற்கு அடிப்படையாகக் கொண்ட புத்த பெருமானின் குணத்தையும் எழுதுக.
(x) பௌத்த சமயத்தில் குறிப்பிடப்படும் செய்யத்தகாத வியாபாரங்கள் **இரண்டினை** எழுதுக.

**2.** (i) பௌத்த தர்மத்தில் போதிக்கப்படும் முக்கிய தியான முறைகள் **இரண்டினதும்** பெயர்களைத் தருக.
(ii) அவற்றுள் ஏதாவதொரு தியானமுறை பற்றிச் சுருக்கமாக அறிமுகம் செய்க.
(iii) மாணவ வாழ்க்கையின் வெற்றிக்கு தியானத்தைப் பயன்படுத்தும் விதத்தை விளக்குக.

**3.** (i) "உத்தானவதோ சதிமதோ" என்ற தம்மபத காதாவைப் பூரணப்படுத்தி எழுதுக.
(ii) இந்த காதாவின் கருத்தை எழுதுக.
(iii) தனிநபர் வாழ்க்கையின் வெற்றிக்கு தம்மபதவிலிருந்து பெற்றுக்கொள்ளத்தக்க முன்மாதிரிகளை மதிப்பீடு செய்க.

**4.** (i) "சேதனாஹம் பிக்கவே கம்மங் வதாமி" என்ற வரிகளின் கருத்தை எழுதுக.
(ii) விளைவுகளின் காலத்திற்கேற்ப கர்மங்களை வேறுபடுத்தும் முறைகள் **நான்கினை** எழுதுக.
(iii) கர்மம், கர்ம விளைவுகள் பற்றிய புரிந்துணர்வு தனியாள் மற்றும் சமூகத்துக்கு நன்மை பயக்கும் முறையினை எடுத்துக்காட்டுக.

**5.** (i) அமாவதுர இனை எழுதிய ஆசிரியரையும் அதற்கு அடிப்படையாக அமைந்த புத்த பெருமானின் குணத்தையும் எழுதுக.
(ii) பன்சிய பனஸ் ஜாதகக்கதை நூல் பற்றிச் சுருக்கமாக அறிமுகம் செய்க.
(iii) இலங்கை மக்களின் சமூக வாழ்க்கையை ஒழுங்கமைத்துக்கொள்வதற்கு சிங்கள பௌத்த இலக்கியங்களின் மூலம் கிடைத்த பங்களிப்பினை விவரிக்குக.

[பக். 6 ஐப் பார்க்க